உ

ஓம் ஸ்ரீ

ஓம் ஸ்ரீ முருகா

ஓம் ஸ்ரீ துர்க்கா லக்ஷ்மி ஸரஸ்வதி துணை

ஓம் ஸ்ரீ மாதா ஸஹாயம்

அன்பு வெளியீடு — விசேஷ அலர் - 4

ஸ்ரீ

# 'மஹாலக்ஷ்மி ஆனந்தக்களிப்பு'




ஆசிரியர் :

'மஹாகவி' திரு. நா. பிச்சுமணி.

தமிழாசான், தென்னிந்திய கல்விக்கழக உயர்தரக் கல்லூரி,

மாதுங்கா, பாம்பே-19.

South Indian Education Society's High School,

MATUNGA, BOMBAY-19.


*


பொருளுதவி :

'அன்பு வெளியீடு' — அலர் - 2,

'குமரப்பத்து'க்குப் பொருளுதவி செய்தருளிய

ஸ்ரீ பி. எஸ். மணி ஐயர்.

உ
ஓம் ஸ்ரீ
ஓம் ஸ்ரீ முருகா
ஓம் ஸ்ரீ துர்க்கா லக்ஷ்மி ஸரஸ்வதி துணை
ஓம் ஸ்ரீ மாதா ஸஹாயம்

அன்பு வெளியீடு — விசேஷ அலர் - 4.

ஸ்ரீ

# 'மஹாலக்ஷ்மி ஆனந்தக் களிப்பு'



ஆசிரியர் :
'மஹாகவி' திரு. நா. பிச்சுமணி.
தமிழாசான், தென்னிந்திய கல்விக்கழக உயர்தரக் கல்லூரி,
மாதுங்கா, பாம்பே-19.
South Indian Education Society's High School,
MATUNGA, BOMBAY-19.



பொருளுதவி :
'அன்பு வெளியீடு' — அலர் - 2,
'குமரப்பத்து'க்குப் பொருளுதவி செய்தருளிய
ஸ்ரீ பி. எஸ். மணி ஐயர்.

உ

ஓம் ஸ்ரீ முருகா

# விஜய ஆண்டே வருக!

1128 சித்திரை 1-ம் உ
திங்கட்கிழமை, (13-4-1953).

வாழ்த்து

வரதனார் வேலன் செவ்வேள்
வளமெலாம் சுரப்ப, மெய்யின்
உரமதாம் அறங்கள் மல்க,
உவகையும் நட்பும் பொங்க,
கரவிலா அன்பின் மாக்ஷி
கனதனம் பெருக, நாளும்
மறுவிலா இன்ப வாழ்வின்
வருகவே! விஜய ஆண்டே!

---

ஆஸ்திகர்களுக்கெல்லாம்
அனந்தகோடி நமஸ்காரம்

வையம் வாழ்க!
வானம் பொழிக!
வசைகள் ஒழிக!
வீரம் பொலிக!
வாய்மை ஓங்குக!
வாட்டமெலாம் மறைக!
வளமெலாம் பெருகுக!

விஜயம் ஒளிரவே விஜய ஆண்டின் வருகையை
வரவேற்போம்.

ஓம் சாந்தி சாந்தி சாந்தி:

மஹாகவி திரு-நா-பிச்சமணி.

உ

முருகா!

பிரசங்கபூஷணம்,

குகஸ்ரீ. பு. பா. இரத்தினசபாபதி நாயகர் அவர்கள்

அளித்த

# சிறப்புரை.

——(o)——

அமுதினு மினிக்கும் அருந்தமிழ் நாட்டு அந்தண்மை வாய்ந்த அறவர் பலர். இறைவன் திருவருளை யெண்ணிய நலத்தால் பேறு பெரிது எங்கும் பெற்றவர்கள் அன்னோர். அவர்கள் வரிசையில் சேர்ந்தவர், நண்பர் பிரம்மஸ்ரீ பிச்சுமணி ஐயரவர்கள். பம்பாய் நகர உயர்தரக் கல்லூரியில் தமிழாசிரியராக இருந்து மாணவர் உளக்கண் மலர்ந்தும் மாதவரான அப்பெருந்தகை, அருள் மலர்ச்சியை நினைந்து நெகிழ்ந்து பாடிய பதிகங்கள் பல. ஸ்ரீ ஐயப்பன் முதல், மூர்த்திகள் ஒவ்வொருவர்க்கும் முறையே அவர்கள் பாடியுள நூற்களைப் பார்க்கும்பேறு இதற்கு முன் பெற்றுளன். அம்மகாகவியவர்கள், இன்று, ஸ்ரீமகாலக்ஷ்மி ஆனந்தக் களிப்பைப் பாடியுளர். வறட்சி நிறைந்த உளத்திற்கு வளமளிக்கின்ற திருவின் திருவடித் தாமரைகளையேத்திப் போற்றும் இதுதுதி நூல், உளஞ்சிறந்த அன்பர்கள் பாராயணத்திற்கு உரியது.

அன்பு, அறம், வாய்மை, தூய்மை யாதிய அழகை யளித்து சோகம் மோகம் போக்கும் தேவினை, 'செத்துச் செத்துப் பிறக்கும் வறுமையைத் தீர்த்திடு' என்று அவர்கள்

விண்ணப்பிக்கும் முதல் துதி கோடிபெறும். 'கடமை யறியாத லோபங்களையும், பொல்லாப் பூசல்களையும் அத்தேவி போக்கிலளேல், உயிர்கட்கு வேறு புகலிடமில்லை' யென்பது முழுமையினும் முண்மை. கீர்த்தனையின் முதற் பகுதியில் 'தேவி' யெனத் துவக்கி, 'என் சிரம் உன் பாதத்து ஏற்பையே' என முடிவுறும் அழகே ஒரு தனி.

தேவியின் திருவடிகட்கே அடைக்கலம் எனும் பொருளில், ஐம்பதுதரம் சரணம் சரணம் எனும் தூய அகவல் நம் உள்ளத்தைத் தொடுகின்றது.

மலையமாக் குன்றிலிருக்கும் மாதேவியை, 'மலையாளே! பரவிய கடல்திரை சேரும் பாதாம்புயத்தளே! சிங்க முதுகில் சிறந்திருக்கும் செல்வியே! கீழ்மைக் குணம், மிடி, வீண் பூசல், கடும்பிணி யாதியவற்றை யகற்றி ஆள்வாய்' என நிறைவுறும் பஞ்சரத்தினம், சிந்தாமணி போல் நிறைவை நம் நினைவில் நிலைக்கவைக்கும் என்பது திண்ணம். இப்படி சதா பாடிப் பாடிப் பரத்தை வழிபடும் இப்பாவலர் வாழ்க என்று வாழ்த்துகின்றது நம் வாய்!

முருகா!

இங்ஙனம்

' திருமுருக நிலயம்.''
97, சஞ்சீவிராயன் கோயில் வீதி,
பழைய வண்ணை, சென்னை-21.

அன்புள்ள
ரசபதி.

உ

ஓம் ஸ்ரீ முருகா
அல்லாஹோ அக்பர்

ஸிலோன்
விடத்தல்தீவு - அன்சாரி நூல்நிலைய செயலாளர்
ஸ்ரீ M. P. M. முகமமது காசீம் ஆலிம்
அவர்கள் எழுதியுள்ளது.

(மேற்படியார் விரும்பிக் கேட்டுக் கொண்டபடி ஈண்டு பிரசுரிக்கப்பட்டுள்ளது.)

786

# அன்பு சிறப்புரை.

★

விடத்தல்தீவு,
(ஸிலோன்)
3-1-53.

அன்பின் திருவருளால் ஆகர்ஷிக்கும் இறைவன் மானிட மக்கட்கு அறிவுமிளிரும அருட்பேரளித்துள்ளான். அத்தகைய கருணைக் கடவுள், மக்களினத்தில் சாதி, பேதம் என்ற பேச்சுக்கே இடமளியாது மக்கள் அனைவருக்கும் தனது தண்ணருள் புரிந்து காப்பாற்றி வருவதுடன் மக்களினத்தில் நின்றுமே அறிஞர்கள், கலைஞர்கள், கவிஞர்கள், தீர்க்கதரிசிகள், நுண்மாணபறிவுடையோர்கள், தியாகிகள் போன்ற பல அறிவுடை பெரியோர்களை மக்களின் முன்னேற்றம், சுபிட்சம், தெய்வ நம்பிக்கை, இறை வணக்கம் முதலிய நல் காரியங்களை எடுத்து இயப்புவதற்காகவே படைத்துள்ளான். அத்தகைய சாலவும் சீலகுணம் படைத்த பெரியார்களின் வரிசையில் வந்த ஒருவர் வித்வான் ஸ்ரீலஸ்ரீ நா. பிச்சமணி

ஐயர் என்றால் மிகையாகாது. என் கடன் பணி செய்து கிடப்பது என்ற ஆன்றோர் அறவுரைக் காளானவர். பராசக்தி முப்பத்து தொடுத்து, குமரோதயம் வரை சுமார் பதினைந்து நூல்களுக்கு குறையாமல் இயற்றி மக்களின் ஆத்மபசியை தணித்து வருகின்றார். தன்னலம் கருதாது பிறர்நலம் கருதி ஆசான் தொழிலில் அவதிப் பட்டுச் சீவியம் நடத்திக்கொண்டு எம் பண்டிதமணி பிச்சுமணி ஐயரவர்கள் கலைப்பணி செய்கின்றார். அன்னா ரின் திருபபணியை நான் ஒரு தமிழ் மூஸ்லீம இவ்வளவு மெச்சுகிறேன் என்று யாரும் தப்பர்த்தம் கொள்ள வேண்டாம். எமது இஸ்லாமிய சமூகத்தில் இத்தகைய பிச்சுமணிகள் தோன்றவில்லையே என்றுதான் வருந்து கிறேன். வாழ்க ஐயர் ஸேவை! வாழ்க மணியின் பணி! வாழ்க கலைஞர் பிச்சு!

வணக்கம்

இங்ஙனம்,
அன்பு சிறியேன்,
(ஒப்பம்) M. P. M. முகம்மது காசிம் ஆலிம்

---

உ

ஓம் ஸ்ரீ முருகா

ஸ்ரீ

# 'மஹாலக்ஷ்மி ஆனந்தக் களிப்பு'

---

ராகம் - தன்யாசி　　　　　　தாளம் - ஆதி

பல்லவி

தேவி மஹாலக்ஷ்மி தாயே அம்பா
(எம்) தாபத்தை தீர்த்தருள்வாய்

அனுபல்லவி

பாபம் பசிபிணிகள் தாரித்ரம் தீவினைகள்
பாபிகள் அகந்தைக்கு ஆளாயிருக்கும் குறை—
(தேவி)

கண்ணிகள்

1. பத்மநாபன் மகிழ் பாவையே அம்பா!
பத்ம அலங்காரி பத்ம அம்லோசனி!
பத்மாஸனத்திருக்கும் யோகிகள் த்யானத்தில்
பத்மம் போல் ஜோதியுடன் விளங்கும் தயாபரி—
(தேவி)

2 அழகது மஞ்சளிலும் மையிலும் இல்லை,
அன்பு வைக்கும் இவ்வுடல் வாய்ப்பிலும் இல்லை,
அழகாகப் போர்த்திடும் ஆடையிலும் இல்லை,
அலங்காரம் செய்து கொள்ளும் அணிகளில்
இல்லை.—(தேவி)

3. அழகே உருவான அன்னையே மொழிகுவாய்,
அன்பு அறம் ஸத்யம் தூய்மையாம் எண்ணங்கள்,
அவலமிலாது சொலல். அனைவர்க்கும்ந ன்மை
செயல்,
அகப்பையாம் திரிகரண சுத்தி இவை அழகாம்—
(தேவி)

4. சோகம் மோகம் போக்கும் தேவி தயாபரி,
செத்து செத்து பிழைக்கும் தாரித்ரம் நீக்குவாய்,
சோதனை செய்திட்டால் ஏழையாம் பொறுப்
போமோ,
செஞ்சுடர்ச் செல்வியே க்ஷேமம் தந்து பாலிப்
பாய்—(தேவி)

5. மாயமான செல்வம் வாய்த்தவுடனே திமிர்
மயக்கம் கொண்டு அகந்தை பைசாச வசப்பட்டு
மாநிலத்தில் தன்னை நிகர்ப்பவர் இல்லை யென்று
முன்னி இன்னல்கள் கோடி செய்பவர்க்கு என்
சொல்வேன்—(தேவி)

6. ஸாதுக்கள் துயர்காண கண்ணிலர் ஆவரே,
ஸத்விஷயங்கள் கேட்க காதுமிலர் ஆவர்,
ஸர்வேசன் நாமம் சொல்ல நாவிலர் ஆவரே,
ஸத்வகுணம் குலைந்து சாக்கடையில் வீழ்வார்—
(தேவி)

7. செல்வத்தின் நாயகி எப்போதும் என்னுள் நின்று
செல்வமமதைதனை செருத்திடு (உன்) செங்
குணத்தால்,
செம்முளரிப்பதம் சேவித்தேன் பாவையே,
செஞ்சொல்லால் உன்புகழ் பாட அருள்செய்
வாய்—(தேவி)

8. ஸத்வகுண பூஷணி, ஸாதுக்கள் ஹ்ருதயமே,
ஸமுத்ரராஜன் பெண்ணே, ரங்கராஜன் செல்வி,
ஸர்வ பூதமுள்ளும் ஸாக்ஷியாய் நிற்கும் கண்ணே,
ஸர்வதுக்க ஹரண ஸர்வ ஜீவரக்ஷகி —(தேவி)

9. நாவால் நயம் பேசி நயவஞ்சகம் கொண்டு
நமனுக்கு வழிகாட்டும் நஞ்சினர்க் கஞ்சும்என்
நல்லாயிரம் தளபத்ம மலரின் மீது
நேர்மை விரதம் பூண்டு நிற்கும் வரலக்ஷ்மியே—
(தேவி)

10. கஷ்டங்கள் அனந்தம், கடமையில் லோபங்கள்,
நஷ்டமென்று தெரிந்தும் நேரும் பூசல்கள் பல,
துஷ்ட மனக்குரங்கைக் கட்டி பிணிக்காமல்
இஷ்ட மானபடி திரியவிடுதல் தீராய் —(தேவி)

11. தத்வமும் நீயே! தத்வார்த்தம் நீயே!
தத்வஸ்வரூப நித்ய நிர்மலவஸ்து நீயே!
தக்க கலையும் நித்ய ஸத்குணநிதி நீயே!
தக்கவர்க்கனுக்ரகம் பாலிப்பவளும் நீயே!—(தேவி

12. உள்ளும் புறமும் உறைபவள் நீயே
ஊறுகள் தவிர்க்கும் உத்தமியும் நீயே
உறவும் உரமும் ஊக்கமும் நீயே அம்பா!
உம்பரெலாம் போற்றும் இன்பமும் நீயலையோ—
(தேவி)

13. பால் கடல் தன்னிலே முத்து மலர் சொரிய
பன்னக சயனனாய் இலங்கும் நீல வண்ணன்
பரந்த மார்பு தன்னில் உறையும் நல்திருவே!
பரிவுடன் உன்பதம் பற்றினேன் அம்மையே—
(தேவி)

14. எட்டு ஆண்டும் முற்று எண்ணி லருந்தவன்
ஏந்தியே ஒருகையில் பிக்ஷை அறை கூவவே,
ஏங்கிய நல்லாள் பாவம் நெல்லிக்கனி ஒன்றீய,
ஏழ்மை அகல நல்ல தங்கக்கனி சொரிந்த—(தேவி)

15. மாதா மரகத மேனியன் செல்வியே,
மாணிக்கம் முதல் நவ ரத்னக் களஞ்சியமே,
மாதவன் மகிழும் நல்பொக்கிஷமே, அம்பா,
மாதவரும் விரும்பி அளிக்கும் வரநிதியே, –(தேவி)

16. வாராதே வந்து வருந்துய ரகற்றுவாய்,
தாராதே தந்து தர்ம நெறியிலுய்ப்பாய்,
நேராதே நேர்ந்து நெடுந்துயர் கொண்ட எம்மை
ஓராதே வந்து உய்யும்வழி காட்டுவாய், —(தேவி)

17. சக்தி, ஸாவித்திரி. காயத்ரியும் நீயே,
சதுர்மறையும் நுவலும் சாஸ்த்ர ஸாரமும் நீயே,
ஸத்யஸ்வரூபம் நீயே, ஸரஸ்வதியும் நீயே,
சங்கடங்கள் ஒழிக்கும் ஸங்கல்பதாரி நீயே –(தேவி)

18. பக்தர்கள் அழைக்கவே பரிவுடன் வந்துதவி
பாலர் எமைக்காத்திடும் பங்கஜவல்லியே,
பரமனுடன் பாரில் பல் அவதாரங்கொண்டு
புண்ணியரைக் காத்த புனிதவல்லி நீயே—(தேவி)

19. ஸௌந்தரவல்லி நீ, ஸௌதர்சனன் பாவை நீ,
ஸாத்விகர்கள் ஹ்ருதய பத்ம விலாஸினி,
ஸத்கர்மம் தழைத்திட, தானதர்மம் பெருக,
ஸகலரும் கைகூப்பி வேண்டும் பெருந்திருவே—
(தேவி)

20. அன்னம் ஆயிரர்க் காயிரம் இட்டாலும்
சொர்ண தானங்கள் ஆயிரம் செய்தாலும்
மன்னும் மாபெரும் பூஜை பல் செய்தாலும்
எண்ணும் தூய்மை இலாதவர் ஏழையே —
(தேவி)

21 இன்னல் ஒருயிர்க் கெண்ணுமை பேர்நிதி,
தன்னைப் போலவே யாரையும் எண்ணியே
உன்னிமாநலம் ஓம்புதல் வாழ்நிதி,
சொர்ணத்தாள் அவர் பங்கினில் வாழ்வளே—
(தேவி)

22. நித்ய சூரிகள் சூழ்ந்து கொண்டாடும் நல்
பத்யம் பாடியே பக்தர்கள் போற்றிசை
அத்திக்கும் அருள்கார் வண்ணன் மார்புறை
சுத்த ஸத்குண ஆனந்த ரூபிணி—
(தேவி)

23. அச்சம் நீக்கும் அபய அஸ்தம் ஒன்று,
பச்சிளங்கிளி ஏந்து கரம் ஒன்று,
இச்சையின் பத்மம் ஏந்தும் செங்கை ஒன்று,
ஸச்சிதானந்தம் உணர்த்தும் பொற்கை ஒன்று,—
(தேவி)

24. தேவதேவர்க்கும் போகம் அருள் தேவி,
மாவளங்களும் மாண்பும் அருள் தேவி,
மேவு அஷ்டைசுவரியம் பாலிக்கும் மாதேவி,
கூவி அழைப்பவர் இல்தோறும் வாழ்தேவி.—
(தேவி)

25. ஏழை எத்தனை பிழைகள் செய்தாலும் உன்
ஆழ்ந்த தண்ணளி வாரிதி ஆழ்த்துவை,
சூழ்ந்த தீவினை தீர்த்து என் வாழ்வினில்
தாழ்ந்த என் சிரம் (உன்) பாதத்து ஏற்பையே —
(தேவி)

சுபம்.

ஸ்ரீ மஹாலக்ஷ்மி ஸஹாயம்.

ஸ்ரீ அகிலாண்டேசுவரி துணை

ஸ்ரீ கோமதி அம்மை பாதாரவிந்தமே சரணம்

---

ஓம் ஸ்ரீ முருகா.

# ஓம் ஸ்ரீ மஹாலக்ஷ்மி சரணம்.

அம்பா மஹாலக்ஷ்மி சரணம் சரணம்.
அகிலாண்டேசுவரி சரணம் சரணம்.
அநாத ரக்ஷகி சரணம் சரணம்.
அழகே அன்பே சரணம் சரணம்
ஆபதம் தீர்த்திடு சரணம் சரணம்.
அஷ்ட லக்ஷ்மியே சரணம் சரணம்.
மோக்ஷ லக்ஷ்மியே சரணம் சரணம்.
வரலக்ஷ்மி வீரலக்ஷ்மி சரணம் சரணம்.
தைர்ய லக்ஷ்மி விஜய லக்ஷ்மி சரணம் சரணம்.
தனலக்ஷ்மி தான்ய லக்ஷ்மி சரணம் சரணம்.
போகலக்ஷ்மி பாக்யலக்ஷ்மி சரணம் சரணம்.
கஜலக்ஷ்மி ஞானலக்ஷ்மி சரணம் சரணம்.
ஸர்வலக்ஷ்ய மருள் சரணம் சரணம்.
மலர்மேல் மங்கையே சரணம் சரணம்.
மால்மகிழ் பாவையே சரணம் சரணம்.
மாநிலம் போற்றிடும் தாயே சரணம்.
பஞ்சம்பிணி அகற்று சரணம் சரணம்.
பங்கஜ லோசனி சரணம் சரணம்.
பத்மாஸினியே சரணம் சரணம்.
பாபகருமம் ஒழி சரணம் சரணம்.
சாந்தி நிலவ வைப்பாய் சரணம் சரணம்
சந்தோஷம் மிளிரவைப்பாய் சரணம் சரணம்.
ஸம்பத்தெல்லாம் தருவாய் சரணம் சரணம்.
குழந்தை உள்ளம் தாராய் திருவே சரணம்
குற்ற மற்ற செல்வமருள் சரணம் சரணம்.
அடைக்கலம் நீயே தேவி சரணம் சரணம்.

பொம்பாய்—மலையமாக் குன்றில்—(Malabar Hall)

திருக்கோயில் கொண்டெழுந்தருளி யிருக்கும்

# ஸ்ரீ மஹாலக்ஷ்மியைப் போற்றி

# பஞ்சரத்னம்

---

மலையமாக் குன்றில்வாழும் மாபெருந் தேவி தன்னை
அலையுமாச் சிந்தைசார்த்து அரும்பதத் துய்த்து
வாழ்த்தின்,
தொலையும் மாவினைகள், ஆர்க்கும் திருவும் மிக்குவந்து
வாழ்வாள்
எலையிலா இன்பவாழ்வும் ஏந்திடப் பெறுவீரன்றே! 1

மேற்றிசைக் கடலினோரம் மறிதரு திரைக்குழாங்கள்
நாற்றிசை பரந்துமேவி நாடிஉன் பதங்களேத்த,
போற்றிசை பலவின்நாதப் பேரொலி ஆர்ப்ப, நங்காய்!
ஏற்றிசை வளங்கள் தாவும் (உன்) ஏந்தெழில்
கோல மென்னே! 2

அடலுற பிடரிமாவின் மிடற்றிடை அமர்ந்த செல்வீ!
கடலிடை அரவமஞ்சத் திடைதுயில் நீலவண்ணன்
உடலுயிர் தன்னின்மேவு உலகளி வளத்தினன்னாய்!
கடைக்குணம், மிடி, வீண்பூசல், கடும்பிணி, அகற்றி
ஆள்வாய். 3

உம்பரின் செல்வமெல்லாம் உன்பதம் நண்ணி யேத்தி
நம்பிநல் நெறியில்நிற்கும் நல்லற வோர்க்கு நல்கும்
தும்பிசூழ் மெல்லிதழ்மேல் தகையுடன் வதிபொற்
பாவாய்!
தம்பிரான் துளபன் கண்ணன் திருவெழில் வண்ணப்
பேடே! 4

புவிதனுக் கிலக்கதாய பட்டினப் பொம்பாய் நேர்ந்த
கவினுறு வளங்களெல்லாம் (நின்) கண்ணருளாலே
யன்றோ!
கவியுறு கல்பனைக்கும் கருத்துக்கும் எட்டாப் பேற்றின்
நவிலுறு சக்திவாய்ந்த மஹாலக்ஷ்மி அன்னாய்!
போற்றி! 5

சுபம்.

---

மங்களம்

மங்களம் பத்மவல்லிக்கும்

மங்களம் கருணை லோசனிக்கும்

மங்களம் பத்மநாபன் மகிழ்

மங்களம் மஹாலக்ஷ்மிக்கும்

மங்களம் ஸத்யஸங்கல்ப

ஸாது ஹ்ருதயர்களுக்கும்

மங்களம் எல்லார்க்கும் நல்ல

அறம் வளம் ஸுகம் பெருக —மங்

ஆசிரியர் மகாகவி-திரு. நா. பிச்சுமணி இயற்றிவரும் 'அன்பு வெளியீடு' நூல்களின் விவரம்.

அன்பு வெளியீடு அலர் 1. செந்தூரகவல்
வேங்கடேச அகவல்
பாரசக்தி 'முப்பத்து'

,, அலர் 2. 'குமரப்பத்து'
ஷை இரண்டாம் பதிப்பு (சில கீர்த்தனங்கள் உள்பட).

,, அலர் 3. 'முருகன் அக்ஷரமாலை'

,, அலர். 4. 'சரணபத்ததி'

,, அலர். 5. 'பராசக்தி கீதம்'

,, அலர். 6. 'திருப்புடைமருதூர் தலச்சிறப்பு'

,, அலர் 7. 'ஐயப்பன் போற்றிசை'

,, அலர் 8. 'முருகன் திருவிருத்தம்'

,, அலர் 9. 'குமரோதயம்'
(நாடகம்)

,, அலர் 10. 'குருவாயூரப்பன் திருச்சதகம்'

அன்பு வெளியீடு விசேஷ அலர் 1. 'ஐயப்பன் ஆனந்தக் களிப்பு'

,, ,, அலர் 2. 'தேவி ஆனந்தக் களிப்பு'

,, ,, அலர் 3. 'முக்கோயில் முப்பத்து'

,, ,, அலர் 4. 'மஹாலக்ஷ்மி ஆனந்தக் களிப்பு'

## ‘அன்பு வெளியீடு’

# வாசகர்களுக்கு ஓர் அறிக்கை

‘அன்பு வெளியீடு’ வாசகர்களுக்கு ஆசிரியர் மனப் பூர்வமான வணக்கம் செலுத்துவதுடன், இவ் வெளியீடு, மாத வார ஸஞ்சிகைபொன்று மல்ல வென்றும், அவ்வப் போது ஆசிரியரின் உள்ளத்தில் இறைவனருளால் எழப் பட்ட உணர்ச்சி வேகத்தால் பரிணமிக்கப்பட்ட செய்யுள் ரூபமான உரைகளை, ஆண்டவனைப் பாடும் கூற்றுக்களை, பொதுஜன ஆதரவு ஏற்படுங்காலத்து, புஸ்தக ரூபமாக வெளியிடுவதே ‘அன்பு வெளியீடு’ என்றும், அதன் பாற்பட்ட ‘அலர்கள’ அன்பர் உள்ளத்திற்கும் ஆண்ட வனுக்குமே அர்ப்பணமென்றும், பதிப்புரிமை முதலிய யாதொரு உரிமையும் ஆசிரியர்க்கில்லை யென்றும், இவ் ‘அலர்களை’ ஆசிரியரைப் போலவே அச்சிட்டு இலவசமாக வழங்கும் பரப்புரிமை தொண்டர் யார்க்கும் உண்டென வும், எல்லார்க்கும் தெரிவித்துக் கொள்ளப்படுகிறது.

பாரத நாட்டில் பல்வேறு பாகங்களிலிருந்தும், இலங்கையிலிருந்தும் அன்புமிக்க பெரியோர் பல்லோரிட மிருந்து வந்துள்ள நூற்றுக்கணக்கான மதிப்புரைகளுக்கு, ஆசிரியர் வெகு வணக்கத்துடன் வந்தனம் செலுத்துவ துடன் அன்னார் ஆதரவை மேன்மேலும் கோருகிறார்.

‘அன்பு வெளியீட்டு’க்கு இதுகாறும், இனியும் பொருளுதவி செய்துவரும் கைம்மாறுகருதாப் பெருந் தகையாளர்க்கு ஆசிரியர் கொண்டுள்ள நன்றியுணர்ச்சி அளவிலது.

வாழ்க தெய்வத் தொண்டு!
வாழ்க நல்லறம்!
வாழ்க நற்றமிழ்!
வாழ்க வையமெலாம்!

கோமதி காந்தன் திருவடி சரணம்

4, Uma Nivas,
Brahmanwada Road,
Matunga, Bombay-19.

மஹாகவி திரு. நா. பிச்சுமணி,
ஆசிரியன்.